பொறுமை நம்பிக்கை

# அற்புத மஹான் ஷிர்டி சாய்பாபா



Free E-Book

B L ஷங்கர்

ஷிர்டி சாய்பாபா வாழ்க்கை வரலாறு

**மின்னூல் வெளியீடு : http://FreeTamilEbooks.com**



பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/arputha$_{m}$ahaan$_{s}$hirdi$_{s}$aibaba

அட்டைப்படம் - B.L.ஷங்கர் - blshankar77@gmail.com

# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: B.L.ஷங்கர் - blshankar77@gmail.com

மின்னூலாக்கம்: சு. ஜெயஸ்ரீ - jayasrijai3@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: B.L.Shankar - blshankar77@gmail.com

Ebook Creation: S. Jayasree - jayasrijai3@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்

# FreeTamilEbooks.com ன்

# பொறுப்புத் துறப்பு

FreeTamilEbooks.com மருத்துவ ஆலோசனைகளை வழங்குவதில்லை. எந்த ஒரு மதத்தையும் கடவுளையும் போதிப்பதில்லை.

FreeTamilEbooks.com ல் மருத்துவம் தொடர்பான பல மின்னூல்கள் இருப்பினும், அவை மிகவும் திருத்தமான தகவல்கள்தான் என்பதற்கு எந்தவொரு உத்தரவாதமும் அளிக்கப்படவில்லை. மருத்துவ சம்பந்தமான எந்தவொரு கட்டுரையிலும் கூறப்பட்டிருக்கும் அல்லது மேற்கோளாக காட்டப்பட்டிருக்கும் எந்தவொரு கூற்றும் உண்மையானது, சரியானது, திருத்தமானது, அல்லது தற்கால நடைமுறையிலுள்ளது

என்பதற்கு எந்தவொரு உறுதி மொழியும் வழங்க முடியாது.  இப்படியான அனேகமான கட்டுரைகள் பகுதியாகவோ அன்றேல் முழுமையாகவோ உத்தியோகபூர்வமற்றவர்களால் எழுதப்படுகிறது. மருத்துவ சம்பந்தமான ஒரு கூற்று மிகச் சரியானதாக இருந்தாலும் கூட, அந்தக் கூற்றானது, தங்களது நோய்க்கோ அல்லது அறிகுறிகளுக்கோ உபயோகிக்க முடியாததாக இருக்கலாம்.

FreeTamilEbooks.com ன் மின்னூல்களில் காணப்படும் மருத்துவ ரீதியான குறிப்புக்கள் பொதுவான தகவல்களாக இருக்க** முடியுமேயன்றி**, ஒரு உத்தியோக பூர்வமான மருத்துவருடைய ஆலோசனையை எந்த விதத்திலும் பிரதியீடு செய்ய முடியாதது ஆகும். FreeTamilEbooks.com மின்னூல்கள் மருத்துவர் அல்ல என்பதை கவனத்தில் கொள்ளவும்.

மருத்துவ ஆலோசனை வழங்குவதோ அல்லது மருத்துவ தொழிலில் ஈடுபடுவதற்கான முயற்சியோ, FreeTamilEbooks.com திட்டத்தின் நோக்கம் அல்ல என்பதை கவனத்தில் கொள்ளவும்.

போலவே, FreeTamilEbooks.com திட்டம் எந்த மதம் சார்ந்ததும் அல்ல. ஆன்மிக வரலாறுகளுக்கு சான்றுகள் இருப்பதில்லை. இங்கு வெளியாகும் ஆன்மிகம் சார்ந்த மின்னூல்களை, முழுமையாக நம்ப வேண்டாம். அவற்றின் உண்மைத் தன்மையை சோதித்து வெளியிடுதல் என்பது இயலாது. நூலாசிரியர்களின் உழைப்புக்கும், அவர்களது இறை நம்பிக்கைக்கும் மரியாதை செலுத்தும் விதமாகவே அவற்றை வெளியிடுகிறோம். ஆன்மிக நூல்களில் உள்ள கருத்துகளை நம்பும் முன் அவற்றை நன்கு கேள்வி கேட்டுத் தெளிய வேண்டுகிறோம்.

FreeTamilEbooks.com வெளியிடும் மின்னூல்களில் காணப்படும் மருத்துவம்/ஆன்மிகம் தொடர்பான எந்தவொரு தகவலையும் பாவிப்பதனாலோ அல்லது பின்பற்றுவதனாலோ ஏற்படக்கூடிய விளைவுகளுக்கு அல்லது முடிவுகளுக்கு, FreeTamilEbooks.com திட்டத்திற்கு பங்களிப்பு செய்யும் எந்தவொரு தனி நபரோ, அமைப்பு இயக்குனர்களோ, பரப்புரை செய்பவர்களோ, நன்கொடை வழங்குபவர்களோ அல்லது Free-TamilEbooks.com திட்டத்துடன் தொடர்புடைய எவருமோ எந்தவொரு பொறுப்பும் ஏற்க மாட்டார்கள்.

# அற்புத மகான் ஷிர்டி சாய்பாபா

ARPUTHA MAHAAN SHIRDI SAIBABA

**Author : B L Shankar**

**எழுத்தாளர் : B L Shankar**

**e-mail – blshankar77@gmail.com**

**Mobile - (+91) 8248381740, (+91) 8300748321**

**Cover design – blshankar77@gmail.com**

**Chennai, Tamilnadu, India.**

**Youtube** - https://www.youtube.com/saishankaratv

**Facebook** - https://www.facebook.com/saishankarachannel

**Blog** - https://saishankaratv.blogspot.com

# நன்றி

**எனக்கு உயிர் கொடுத்து, இன்று வரை ஊக்கம் கொடுத்து வரும் என் பெற்றோருக்கு முதற் கண் நன்றி…**

# என்னுரை

இது எனது முதல் புத்தகம் என்பதால் நான் பயன்படுத்தும் தமிழில் பிழை இருப்பின், மன்னித்து பொருத்தருள அனைவரையும் தாழ்மையோடு வேண்டிக்கொள்கிறேன். சினிமா மற்றும் தொலைக்காட்சி தொடர்களின் படத்தொகுப்பாளராக இருந்த எனக்கு புத்தகம் எழுதி வெளியிட வேண்டும் என்கிற ஒரு எண்ணம் வந்தது இந்த freetamilebooks.com என்கிற வலை பக்கம் பார்த்த பிறகு தான். புத்தக வாசிப்பு பயிற்சி குறைந்து வரும் இந்த காலத்தில், கடினமான உழைப்பை சேவையாக செய்து வரும் இந்த இலவச மின் புத்தக குழுவை பார்க்க ஆச்சரியமாக உள்ளது. புத்தகம் வாசிக்கும் உத்வேகத்தை தூண்டும் விதமாக, பல வருடங்களாக விடா முயற்சியுடன் பொது நல நோக்கத்தோடு இந்த தளத்தை நடத்தி

வருவது மெய் சிலிர்ப்பான விஷயம். இந்த குழுவில் பணி புரியும் அணைத்து அன்புள்ள நல்ல உள்ளங்களுக்கும் என் பாராட்டுகளும், நன்றிகளும். என் புத்தகத்தை இந்த தலத்தில் வெளியிடுவதை நினைத்து நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். இறைவன் அருள் அனைவருக்கும் கிடைக்க பிரார்த்தனை செய்கிறேன்.

துன்பங்கள் மனிதனை ஆட்கொள்ளும்போது அவன் இறைவனை நாடி தன்னை காக்கும்படி வேண்டுகிறான். இறைவனை வழிபடும் மனிதன் சாப விமோசனம் அடைந்த கதைகளை நாம் கேட்டதுண்டு. எப்போதெல்லாம் அநீதியும் பாவங்களும் தலைவிரித்து ஆடுகிறதோ அப்போதெல்லாம் இறைவன் இவ்வுலகில் மனித உருவில் அவதரித்து இந்த உலகை வழி நடத்துகிறார். இறை நம்பிக்கை இல்லாத மனிதர்கள் கூட இறைவனின் அவதாரங்களை

பற்றியும் அவர்கள் நிகழ்த்திய அற்புதங்கள் பற்றியும் அறிந்து மனம் மாறுவதுண்டு. புனித நூல்கள் பகவத் கீதை, பைபிள், குரான், வேதங்கள், ராமாயணம், மகாபாரதம், நன்னெறி கதைகள் வாயிலாக இறைவன் நற்சிந்தனைகளை கூறி, மனிதனை வழிநடத்துகிறார்.

இந்து கடவுள் குரு தத்தாத்ரேயரின் மறு அவதாரம் ஷிர்டி சாய்பாபா என்று நம்பப்படும் நிலையில். சாய் பாபாவை எல்லா மதத்தினரும் வணங்கி வருகிறோம்.

பாபா ஜாதி, மதம் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவர். சாய் பாபா ஒரு இந்துவா அல்லது இஸ்லாமியரா என்று உறுதியாக கண்டறியபடவில்லை என்றாலும் அவரை எல்லா மனிதர்களும் எந்த பாகுபாடின்றி வணங்கி வருவது பாபாவின் சிறப்பாகும். சாய்பாபாவுடன்

வாழ்ந்த பக்தர் திரு. ஹேமத்பந்த் என்பவர் பாபாவின் கதையை எடுத்துரைக்க ’ ஸ்ரீ சாய் சத்சரித்ரம் ’ என்கிற பாபாவின் வரலாற்றை புத்தகமாக எழுதினார்.

ஷிர்டி சாய்பாபாவிற்கு உகந்த நாள் வியாழக்கிழமை. குரு பார்க்க கோடி நன்மைகள் உண்டு என்று ஒரு பழமொழி உண்டு. ஷிர்டி சாய்பாபா குரு தத்தாத்ரேயரின் மறு அவதாரம் என்பதால் அவரை வியாழனன்று வழிபடுவது சிறப்பு.

சாய் பாபா ஒரு இளைஞனாக ஷிர்டி கிராமத்திற்கு அவரது குருவின் சமாதியை காண வந்ததாக அவரின் சரித்திரம் கூறுகிறது. எல்லா கடவுளுக்கும் சக்தி உண்டு.

எல்லா கடவுளுக்கும் ஒரு தனித்துவம் உண்டு. அந்த வகையில் ஷிர்டி சாய்பாபாவின் தனித்துவ

சக்தி, பாபா ஷிர்டி மக்களுக்கு செய்த இலவச மருத்துவம்.

குறைகள் இல்லாத மனிதனே இல்லை. தீய எண்ணங்களை தவிர்த்து மனம் உருகி இறைவனை வழிபடுவது மோட்சத்திற்கான வழி. சாய் பாபாவை வணங்குவதால் கஷ்டங்கள் விலகும் என்ற நம்பிக்கையில், பாபா அருள் கிடைக்க ஷிர்டி கிராம மக்கள் அவரை பூஜித்தனர்.

ஆன்மீகம், இந்த உலகில் உள்ள எல்லோரின் வாழ்வையும் சிறப்பிக்கும் ஞான திறவுகோல். சாய்பாபாவின் சத் சரித்திரத்தை படிப்பது சிறப்பான பலன்களை தரும் என்று பலர் கூற கேட்டதுண்டு. எல்லா மத நம்பிக்கை மீதும் மரியாதை கொண்டிருக்க வேண்டும். எந்த மனிதனையும் மனம் புண்படுத்த கூடாது.

நம்பிக்கை மற்றும் பொறுமை

கொண்டவர்களுக்கு பாபாவின் அருள் கண்டிப்பாக கிடைக்கும். இறை நம்பிக்கை இல்லாத சில மனிதர்களும் இந்த சமூகத்தில் உண்டு, அவர்களின் வாழ்வும் இறைவனால் தான் வழி நடத்தப்படுகிறது என்பது நிதர்சனமான உண்மை.

ஷிர்டி சாய் பாபா கூறியது போல், இறைவனின் அவதாரங்களும் வடிவங்களும் வேறுபடலாம். ஆனால், இறைவன் ஒருவரே. ஜாதி, மத, இன வேற்றுமைகள் பார்க்காத நல்ல உள்ளங்கள் அனைவருக்கும் இந்த புத்தகம் சமர்ப்பணம். இந்த புத்தகத்தை வாசிக்க உங்கள் பொன்னான நேரத்தை ஒதுக்கியதற்கு எனது நன்றி. வாழ்க வளமுடன்....

மனமார்ந்த நன்றி,

# 1. ஷிர்டி சாய்பாபா ஷிர்டிக்கு வந்த நிகழ்வு

வட இந்திய மகாராஷ்ட்ரா மாநிலத்தில் உள்ள ஷிர்டி ஒரு கிராமம். ஆங்கிலேயர் ஆட்சி செய்த காலத்தில் அந்த ஊரில் ஒரு நாள் ஒரு இளைஞர் வந்தார். அந்த இளைஞர் ஒரு வேப்ப மரத்தின் அடியில் அமர்ந்து தியானம் மேற்கொண்டார். அந்த ஊர் மக்கள் அந்த இளைஞரை அதுவரை பார்த்ததில்லை. ஷீரடியில் சிவனின் கோவில் ஒன்று உண்டு. அந்த சிவனை கண்டோபா சிவன் என்று அழைப்பர். அந்த கோவிலில் அர்ச்சகராக பணிபுரிந்து வந்தவர் மகால்சாபதி. அவர் சிவனுக்கு பூஜையை முடித்த பிறகு, வேப்ப மரத்தின் அடியில் அமர்ந்து இருக்கும் இளைஞரை பார்த்து ஆச்சரியம் அடைந்தார். இந்த இளைஞரை

பார்க்க அவருக்கு மிக வியப்பாக இருந்தது.

தியானம் செய்த நிலையில் இருந்த இளைஞரை பார்த்து ‘யார் நீ’ என கேட்க, அந்த இளைஞர் தியானத்தில் மூழ்கி இருந்ததால் பதில் தரவில்லை. மீண்டும் சத்தமாக அவரின் தியானம் களையும்படி ’ நீ யார் ’ என்று கேட்க, சத்தம் கேட்டு தியானம் களைந்த அந்த இளைஞர், தான் இந்த ஊருக்கு தன் குருவை நினைத்து தியானம் புரிய வந்ததாகவும், தனது குருவின் சமாதி இந்த வேப்ப மற அடியில் இருப்பதாகவும் கூறினார். அந்த இளைஞரின் தோற்றமும், தியான நிலையும், குரு மீது இருந்த பக்தியும், மகால்சாபதிக்கு அந்த இளைஞர் மீது ஒரு நல்ல அபிப்ராயத்தை வர செய்தது. அவர் அந்த இளைஞரை அன்பாக ’ சாய் ’ என்ற பெயருடன் அழைத்தார்.

அந்த பெயர், அந்த இளைஞர்க்கு பிடித்ததால்

அவரும் அதை ஏற்றுகொண்டார். மகால்சாபதியின் கண்டோபா சிவன் கோவில் பிரசாதத்தை சாய் பாபாவிற்கு கொடுத்தார். அவரும் அதை ஏற்றுகொண்டார்.

ஷிர்டியில் மதிக்க தக்க ஒரு விவசாயி ’ அப்பா பாட்டீல் ’ என்பவர். அவரின் மனைவி பெயர் ’ பைஜா பாய் கோட்டே ’. பைஜா பாய் இறை நம்பிக்கை உடையவர். இறைவனை முழுமையான பக்தியோடு நம்புபவர். அவர் தினமும் சிவன் கோவிலுக்கு வந்து இறைவனுக்கு பிரசாதம் படைப்பதை வழக்கமாக கொண்டு இருந்தார். பைஜா பாய், எப்போதும் போல் கோவிலுக்கு வந்தார், அர்ச்சகர் மகால்சாபதி அங்கு இல்லாததை பார்த்து அவரை தேடி வேப்ப மரத்திடம் வந்தார். அர்ச்சகர் ஒரு இளைஞனிடம் எதோ பேசியபடி நிற்பதை பார்த்து அருகில் வந்தார்.

அருகில் வந்து, இளைஞரை பார்த்த பைஜா பாய் அந்த இளைஞர் முகத்தில் உள்ள சக்தியால் தனக்குள் ஒரு தாய்மை உணர்வு வருவதை உணர்ந்து சிலிர்த்து போனார். குழந்தை வரம் வேண்டி கோவிலுக்கு வரும் பைஜா பாய், அர்ச்சகர் மகால்சாபதியிடம் இந்த இளைஞர் பற்றி ஆவலோடு கேட்டார். அவர் நடந்ததை கூறி, அவருக்கு சாய் என்று பெயர் வைய்துள்ளதாக கூறினார். இதை கேட்ட பைஜாபாய் அவரை ' சாய் ' என்று மனதில் அழைக்க, உடனே அந்த இளைஞர் அவரை உறக்கமாக ' என்ன பைஜா மா என்னை அழைத்தாயா ? ' என்று கேட்டார். மனதில் நினைத்தது இந்த இளைஞருக்கு எப்படி தெரித்தது என்று பைஜா பாய் ஆச்சர்யமடைந்தார். இந்த இளைஞர் சாதாரண இளைஞர் அல்ல. இவர் விசேஷ சக்தியுள்ள தெய்வ பிறவி என்பதை உணர்ந்தார். தன்னை ' அம்மா ' என்று அழைத்த

பாபாவின் குரல் அவரின் காதுகளில் ஒலித்து கொண்டே இருந்தது.

நெகிழ்வான அந்த தருணத்தில் பைஜா பாய் அந்த இளைஞரிடம், என்னை அம்மா என்றழைத்து என் உள்ளத்தில் இடம் பிடித்த இந்த தருணம் மிக மகிழ்ச்சியான தருணம் என்று கூற, பைஜாமா கூறியதை கேட்ட பாபா சந்தோஷமடைந்தார்.

பாபாவும், பைஜாமாவும் பேசிக்கொண்டு இருப்பதை பார்த்த ஷிர்டி அரசிடம் பணிபுரியும் ஒருவர், ஷீரடியில் புதிதாக ஒரு இளைஞர் வந்தது குறித்து, அவர் மகால்சாபதி மற்றும் பைஜாவிடம் பேசிக்கொண்டு இருப்பதாகவும் தகவல் கூறினார். இதை கேட்ட அரசர் இந்த இளைஞர் யார் என்று அரிய வேப்ப மரத்தை நோக்கி வந்தார். அரசர் வருவதை பார்த்த மக்கள் அங்கு வந்து கூடினர். அரசர், இந்த இளைஞரிடம் ”

நீ யார்? ஏன் இந்த மரத்தடியில் அமர்ந்து உள்ளாய் ” என்று அரசன் கேட்க, தனது குருவின் சமாதி அந்த இடத்தில உள்ளதால் அங்கு தியானம் புரிய வந்து அமர்ந்து உள்ளதாக கூறினார் பாபா. இதை கேட்ட அரசர் சிரித்தபடி இந்த ஷிர்டி கிராமத்தில் தனக்கு தெரியாமல் அப்படி ஒரு சமாதி இருக்க வாய்ப்பில்லையே என்று கூறி, தனக்கு அந்த இளைஞர் கூறுவதில் சந்தேகம் இருப்பதாக கூறி அந்த சமாதியை தோண்டி பார்க்க தனது ஆட்களை கட்டளையிட்டார்.

இதை கேட்ட சாய் பாபா இந்த சமாதியை தோண்ட வேண்டாம் என்று கூறி அவர்களை தடுக்க நினைத்தார். ஆனால் அரசின் ஆணையை மீறி ஷீரடியில் எந்த ஒரு நிகழ்வும் அங்கு நடக்க வாய்ப்பில்லை என்பதால், அரசை அவமதிக்காமல் சாய் பாபாவும் அவர்கள் போக்கில் விட்டு விட்டார். குருவின் சமாதி தோண்டும் அந்த நிகழ்வு

பாபாவிற்கு மிக வருத்தத்தை அளித்தது.

தோண்டி கொண்டு இருந்த அரசின் ஆட்கள் அங்கு எதுவும் இல்லை என்று கூற, அரசர் மேலும் பாபாவை இழிவு படுத்தினார். சந்தேகம் வந்த பிறகு வேறு வழி இல்லை என்று, பாபாவே பைஜா பாயின் கணவரிடம் குருவின் சமாதியை தோண்ட சொன்னார். அவரும் தோண்டினார். அப்போது, நான்கு தீபங்களுடன் ஒரு சமாதி இருப்பது கண்டறியப்பட்டது. இதை பார்த்த அரசுக்கும் அனைவருக்கும் பெரும் ஆச்சரியமாக இருந்தது. பாபா மீது சுமத்தப்பட்ட பழி நீங்கியது.

தனது குருவின் சமாதியை தோண்டி எடுத்தது தன் குருவை அவமதித்தது போன்று தோன்றிய சாய் பாபாவிற்கு அங்கு இருக்க பிடிக்காமல், அந்த நிமிடமே கோவமாக ஷிர்டியை விட்டு புறப்பட்டு சென்றுவிட்டார். அவர் புறப்பட்ட அந்த நேரத்தில்

மேகம் இருள் சூழ்ந்து பலத்த காற்று அடித்தது. அங்கு இருந்த அனைவருக்கும் இந்த நிகழ்வு மறக்க முடியாத விதமாக ஆனது.  சாய் பாபா ஷிர்டியை விட்டு சென்றது பைஜா பாய், அப்பா பாடீல் மற்றும் மகால்சாபதிக்கு மிக வருத்தமாக இருந்தது.

தன்னை தாய் என்று அழைத்த மகனை பிரிந்துவிட்டதாக நினைத்து பைஜா பாய் மிகவும் வருந்தினார்.  என்றாவது ஒரு நாள் சாய் பாபா மீண்டும் ஷிர்டிக்கு வருவார் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்தது.  இந்த நம்பிக்கையோடு தினமும் அவர் அந்த வேப்ப மரத்தடியில் உணவு வெய்த்து வந்தார்.  அவர் நம்பிக்கை மற்றும் பொறுமை அவரை வழி நடத்தியது.

# 2. ஷிர்டி சாய் பாபா மீண்டும் ஷிர்டி வந்த நிகழ்வு

ஷிர்டியை விட்டு வந்த சாய் பாபா ஒரு ஊரில் தங்கி இருந்தார். அவரின் வாலிப வயது கடந்து ஒரு நடுத்தர வயதில் இருந்த சாய் பாபா, இளம் வயது கடந்தும் ஷிர்டியில் உள்ள தனது குருவின் நினைவாகவே இருந்தார். அவர் குருவின் நினைவலைகளில் அவரை நினைத்து தியானம் செய்து கொண்டு இருந்தார். என்றாவது ஒரு நாள் ஷிர்டி சென்றுவிட வேண்டும் என்ற எண்ணம் அவருக்குள் இருந்தது.

' சாந்த் பாட்டீல் ' என்ற செல்வ செழிப்போடு இருந்த செல்வந்தர் ஒருவர் தனது குடும்ப திருமண நிகழ்ச்சி பற்றி தகவல் சொல்வதற்காக தனது

குதிரையில் பயணம் மேற்கொண்டார். இந்த பயணம் வெகு தூரம் என்பதால் அவர் சில இடங்களில் இளைபாறிவிட்டு சென்றார். ஒரு இடத்தில இளைப்பாறும் போது தனது குதிரை காணாமல் போய்விட, பெரும் மன உழைச்சலுக்கு ஆளானார். மிகவும் அன்பாக வளர்த்த தனது குதிரை எங்கு தேடியும் கிடைக்காததால் வருத்ததுடன் இருந்தார். ஊருக்கு திரும்பி செல்ல முடியாமல் ஒரு இடத்தில் வந்து அமர்ந்தார். அங்கு அவருக்கு தாகம் ஏற்பட அருகில் அமர்ந்து இருந்த சாய் பாபாவிடம் தனக்கு தண்ணீர் வேண்டும் என்று கேட்க நினைத்தார். கேட்பதற்குள் பாபா அவரிடம் ' என்ன சாந்த் பாடீல் தாகம் எடுக்கிறதா ? குடிக்க தண்ணீர் வேண்டுமா ? ' என்று கேட்க, பாபா தனது பெயரை அறிந்து இருந்தது மட்டும் அல்லாது தனக்கு குடிக்க தண்ணீர் தேவை என்பதை எப்படி அறிந்தார் என்று சாந்த் பாடீல் ஆச்சரியபட்டார்.

பாபாவிடம், சாந்த் பாடீல் ’ என் பெயர் மற்றும் எனக்கு தண்ணீர் தாகம் என்பது உங்களுக்கு எப்படி தெரியும் ? நீங்கள் யார் பாபா ? ’ என்று கேட்டார். அதற்கு பாபா ’ நீ என்னை நம்பினால் நான் உனக்கு எல்லாம், நீ என்னை நம்பாவிடில், நான் உனக்கு ஒன்றுமே இல்லை ’ என்றார். பாபாவின் பதில் சாந்த் பாடீலுக்கு விநோதமாக இருந்தது. மேலும், பாபா புன்னகைத்தபடி ’ உனது குதிரையை தேடி வந்தாயே கிடைத்ததா ? ’ என்று கேட்க, குதிரையை துளைத்த சாந்த் பாடீலை அதிர்ச்சி அடைய செய்தது. தனது குதிரை எங்கு தேடியும் கிடைக்கவில்லை, ஊருக்கு செல்ல முடியாமல் உள்ளேன். நீண்ட நாட்களாக வளர்த்து வரும் குதிரை என்பதால் குதிரையை பிரிந்து இருக்க வருத்தமாக உள்ளது என்று கூறி வருந்தினார். குதிரை இல்லாமல் வருந்தும் சாந்த் பாடீளிடம், ’ நீ துளைத்த குதிரையும் உன்னை தான்

தேடிகொண்டு உள்ளது ' என்றார். இந்த செய்தியை கேட்ட சாந்த் பாடீல் மிகுந்த சந்தோஷம் அடைந்தார். பாபா அந்த குதிரையின் பெயரை கூறி சத்தமாக அழைத்தார்.

சிறிது நேரத்தில் பாபாவின் குரல் கேட்ட குதிரை அவர்கள் இருக்கும் இடம் தேடி வந்தது. காணாமல் போன குதிரையை பார்த்த சாந்த் பாடீல் குதிரை தன்னிடம் வந்து சேர்த்ததை நினைத்து மகிழ்ச்சி அடைந்தார். பாபாவின் அற்புத செயலால் பாபாவின் பக்தனாக மாறிவிட்டதாக கூறி சாந்த் பாடீல் பாபாவிடம் ஆசி பெற்றார். அவருக்கு தாகம் இருப்பதை உணர்ந்த பாபா, தண்ணீர் கொடுக்க, சாந்த் பாடீல் மன நிறைவோடு தண்ணீரை குடித்தார். பாபா மீது அளவு கடந்த பக்தி கொண்ட சாந்த் பாடீல் தனது ஊருக்கு வருமாறு அன்புடன் கோரிக்கை விடுத்தார். அவர் அழைத்த உடன் பாபா வருவதாக கூறவில்லை. துறவு வாழ்க்கை வாழும்

பாபா, இவ்வுலகில் எதுவும் நிரந்தரம் இல்லை நீ உனது ஊருக்கு செல் என்று கூற,

தனது உறவினருக்கு திருமணம் நடக்க உள்ளதாகவும், அதற்கு பாபா வந்து ஆசி வழங்க வேண்டும் என்றும் அழைத்தார் சாந்த் பாடீல். ஷிர்டியில் திருமண நிகழ்வு நடக்க உள்ளதாக கூற, பாபாவின் முகம் மகிழ்ச்சியில் மலர்ந்தது. ஷிர்டிக்கு மீண்டும் எப்போது செல்வோம் என்று நினைத்து காத்திருந்த பாபாவிற்கு சாந்த் பாடீலின் அழைப்பு, தனக்கான தனது குருவின் அழைப்பாகவே மனதில் தோன்றியது. ஷிர்டி என்பதால் பாபா சம்மதித்தார். வீட்டுக்கு சென்று அனைத்து ஏற்படும் செய்து கொண்டு இருக்கும் படி சாந்த் பாடீலிடம் கூறி, இரவு ஊர்வலத்தில் கலந்து கொள்வதாக கூறினார் பாபா. தனது உறவினர் திருமணதிற்கு பாபா வரும் சந்தோஷத்தில் சாந்த் பாடீல் அங்கிருந்து விடைபெற்று சென்றார்.

இரவு திருமணத்திற்கு புறப்பட ஊர்வல கூட்டம் கோலாகலமாக தயாராக இருந்தது. இரவு நேரம் போக போக சாந்த் பாடீல் பாபா வரும் வழியை பார்த்து காத்துகொண்டு இருந்தார். அவரது தம்பி இன்னும் ஏன் தாமதம் புறப்பட ? என்று சாந்த் பாடீளிடம் கேட்க, ஒரு முக்கிய விருந்தினருக்காக காத்துகொண்டு இருப்பதாக கூறினார் சாந்த் பாடீல். அவரது தம்பிக்கு ஒன்றும் புரியவில்லை.

நடந்த எல்லாவற்றையும் தனது தம்பியிடம் கூறி, பாபா வந்த பிறகு தான் புறப்பட முடியும் என்று கூறினார் சாந்த் பாடீல். பாபாவை நாம் பத்திரமாக அழைத்து சென்று நல்ல முறையில் அவர் மனம் விரும்பியது போல் நடக்க வேண்டும் என்று கூறினார்.

சிறுது நேரம் சென்றது, சாந்த் பாடீல் இருக்கும் இடத்தை பாபா வந்தடைந்தார். பாபாவின்

வருகையை பார்த்த சாந்த் பாடீல் மிகுந்த சந்தோஷம் அடைந்தார். பாபாவின் கைகளை பிடித்துகொண்டு, எங்கு நீங்கள் வராமல் போய்விடுவீர்களோ என்று நினைத்தேன். நல்லவேளை நீங்கள் இன்று எங்கள் குடும்ப நிகழ்வில் பங்கு கொள்ள வந்துவிட்டீர்கள் என்று கூறினார். ஷீரடிக்கு அழைத்து நான் வராமல் இருப்பேனா என்ன ? நான் பல வருடமாக செல்ல வேண்டிய இடம் ஷிர்டி. என் குருவின் அழைப்பாக தான் இந்த அழைப்பை நான் நினைக்கிறேன். வாருங்கள் தாமதிக்காமல் செல்லலாம் என்று அங்கிருந்து அனைவரும் ஷிர்டியை நோக்கி ஊர்வலமாக சந்தோஷமாக புறப்பட்டனர்.

இரவு நேரம் தீ பந்தத்தின் உதவியுடன் காட்டு பகுதி வழியாக ஷிர்டியை நோக்கி சாந்த் பாடீல் மற்றும் அவரது உறவினர்கள் பேசிக்கொண்டும் பாடிக்கொண்டும் மகிழ்ச்சியாக பயணத்தை

மேற்கொண்ட போது பாபாவும் தனக்கு பிடித்த இறைவனின் பாடல்களை பாடி ஜபித்து கொண்டு நடந்து கொண்டிருந்தார். சாந்த் பாடீலின் மகன் மட்டும் தனியாக முன்னோக்கி நடக்க தொடங்கினான். அப்போது திடீரென்று ஒரு சிறுத்தை சாந்த் பாடீலின் மகனிடம் வந்து நின்றது. இதனை பார்த்து அதிர்ச்சி அடைந்த சாந்த் பாடீல் மற்றும் அவரின் உறவினர்கள் பயத்தில் கத்தி கூச்சளிட்டனர்.

பாபா அவர்களை அமைதியாக இருக்கும் படி கூறி, அந்த சிறுத்தையின் அருகில் சென்று அந்த சிறுத்தையின் கண்களை கோபத்தோடு பார்த்து நின்றார். பாபாவின் கண்களை பார்த்த உடன் எதோ ஒரு அற்புத சக்தி பாபாவிடம் இருப்பதை உணர்ந்த அந்த மிருகம் மெல்ல மெல்ல பின்னோக்கி சென்றது. பாபா, சிறுவனை தனது கரங்களால் தூக்கி எடுத்து கொண்டு வந்து சாந்த்

பாடீஸிடம் பத்திரமாக கொடுத்தார். சாந்த் பாடீல் மற்றும் அவருடன் வந்தபவர்கள் பாபாவிடம் நன்றி கூறி பயணத்தை தொடர்ந்தனர்.

காலை விடிந்தது, பாபாவும் திருமண கூட்டமும் ஷிர்டியை வந்து அடைந்தனர். பாபா ஷிர்டி மண்ணில் கால் வெய்ததும் அவர் இந்த ஊரை விட்டு சென்ற போது இருந்த அதிவேக காற்றும் மழையும் அடிப்பது போல் மக்கள் உணர்ந்தனர். பாபா நேராக கண்டோபா கோவிலுக்கு சென்று சிவனை வணங்க அந்த கோவிலில் அடி எடுத்து வெய்த்தார்.

பாபா, சிவன் கோவில் உள்ளே வருவதை கவனித்த அர்ச்சகர் மகால்சாபதி, அங்கேயே நில்லுங்கள் இது இந்துக்களின் கோவில், உள்ளே வர உங்களுக்கு அனுமதி இல்லை என்று கூற, உலகில் உள்ள எல்லா கடவுளும் ஒன்று

தான். தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் எந்த வேறுபாடும் இறைவன் பார்ப்பதில்லை, அப்படி இருக்க மனிதர்களிடம் மட்டும் ஜாதி, மதம் என்ற வேறுபாடுகள் எங்கிருந்து வந்தது. எந்த புனித நூலிலும் மனிதருக்குள் வேறுபாடுகள் பார்க்க வேண்டும் என்று குறிப்பிடபடவில்லையே. ஒரு கோவில் அர்ச்சகராக நீங்கள் இதை உணராமல் இருப்பது எனக்கு வருத்தமாக உள்ளது என்று கூறி பாபா அங்கிருந்து புறப்பட்டார்.

பாபா சென்ற பிறகு, அர்ச்சகர் மகால்சாபதி நடந்ததை நினைத்து வருத்தம் அடைந்தார்.

இளமையில் நட்டு வைத்த செடி உயர்ந்த மரமாக வளர்ந்து இருப்பதை பார்த்து, அந்த மரத்தின் நிழலை ரசித்து விட்டு, வேப்ப மரத்தை நோக்கி நடந்தார் பாபா. தனது குருவின் சமாதியை வணங்கி சிறிது நேரம் தியானம் மேற்கொண்டார்.

# 3. பாபாவின் துவரகமாயி & லெண்டி பூங்கா

பாபா தங்கி இருந்த இடத்தில் இருந்து அருகாமையில் ஒரு பழைய கட்டிடம் இருந்தது. அந்த கட்டிடம் பழைய கட்டிடம் என்பதால் அது சற்று பாழடைந்து இருந்தது.  அதன் சுவர்கள் மேற் கூரை இல்லாமல் இடிந்த நிலையில் இருந்தது.  அதனை பார்த்த பாபாவிற்கு தான் தங்கி இருக்க வேண்டிய இடம் இது தான் என்று மனதில் தோன்றியது.  அதனால் அந்த இடத்தில சென்று ஒரு சில நிமிடங்கள் அமர்ந்தார்.  அந்த இடத்தில இருந்த அமைதி அவருக்கு நிம்மதியை கொடுத்தது. இனி ஷீரடியில் தனக்கான இடம் இது தான் என்று அவருக்கு தீர்மானம் ஏற்பட்டது.  இந்த இடத்தை ஊர் மக்கள் பழைய பாழ் மண்டபம் என்று

ஒதுக்கிய நிலையில், பாபா மட்டும் அந்த இடத்தில் நிலவிய அமைதியால் தியானம் செய்வதற்கு சிறந்த இடமாக கருதினார். ஷிர்டி மக்கள் பாபா பாழ் அடைந்த மசூதியில் தங்கி இருப்பதை பார்த்து வருத்தம் அடைந்தனர். மசூதி இருக்கும் பாழடைந்த நிலையில் பாபா அங்கு எப்படி தங்குவார் என்று யோசித்தனர். ஆனால் அவர்களுக்கு பாபாவிடம் சென்று இதை பற்றி கேட்க தைரியம் வரவில்லை. பாபாவின் அன்பினால் அவர்கள் அனைவரும் அமைதியாக இருந்தனர். பாபாவை பொறுத்தவரை அவருக்கு அந்த இடத்தில் மன நிறைவு தோன்றியது. அதனால் அந்த இடத்தை அவர் ' துவாரகமாயி ' என்று அழைக்க விரும்பினார். தனது தாயின் மடியில் அவர் இருப்பது போன்று அவருக்கு ஒரு மகிழ்ச்சி இருந்தது. அந்த இடத்தை துவாரகமாயி என்று பாபா அழைத்ததால் மக்களுக்கு அது அவருக்கான

இடம் என்று தெரிய வந்தது. பாபாவின் ஆசியை பெற பலர் அங்கு வந்து சென்றபடி இருந்தனர். பாபாவின் அற்புத சக்தியால் வந்தவர்கள் உடலில் எந்த குறை இருந்தாலும் அதனை தனது மருத்துவ சக்தியால் குணபடுத்தி வந்தார்.

பாபா ஒரு துறவி என்பதை தாண்டி அவரின் மருத்துவம் ஏழை பணக்காரன் என்ற பாகுபாடின்றி மக்களின் தேவைகளை நல்ல முறையில் நிவர்த்தி செய்தார். பாபாவின் அன்பும், மருத்துவமும், உபதேசங்களும், ஷிர்டி மக்களுக்கு பலமாக இருந்தது.

உணவிற்காக ஷீரடியில் உள்ள மக்களிடம் பாபா யாசகம் கேட்டு செல்வதை, பாபா தனது தர்மமாக கருதினார். தர்மம் செய்பவர்களுக்கு மட்டும் அல்லாது எல்லோரையும் சமமாக பாவிக்கும் குணம், பாபாவிடம் இருந்த சிறந்த

குணமாகும். நம்பியவர்கள் வாழ்வில் ஒரு ஒளி விளக்காக பாபா இருந்தார் என்பது உண்மை. துறவிகளின் வாழ்க்கை, தியானம் மற்றும் இறைவனை நினைப்பது என்பதை தாண்டி மக்களுக்காக செய்ய கூடிய ஒரு சேவையாக நினைத்தார். பாபா மருத்துவம் தியானம் இறைவழிபாடு என்று அல்லாமல் செடிகளை தண்ணீர் ஊற்றி வளர்ப்பதையும் விரும்பினார். ஷீரடியில் தோட்டம் அமைத்திட வேண்டும் என்று அவருக்கு மனதில் தோன்றியதால் அவர் ஒரு இடத்தை தேர்ந்தெடுத்து செடிகளை நட தொடங்கினார். சில நாட்களில் அந்த தோட்டம் மிக அழகாக இருந்தது. அந்த தோட்டத்தின் பெயர் லென்டி பூங்கா என்று அழைக்கபடுகிறது. பாபா துவாரகமாயி-யில் இல்லாத நேரத்தில் இந்த தோட்டத்தில் செடிகளுக்கும் மரங்களுக்கும் தண்ணீர் ஊற்றி பாராமரித்து வந்தார் என்று ஊர்

மக்கள் அறிவர். ஊர் மக்களும் அந்த தோட்டத்தில் பாபாவின் அனுமதியோடு பயன் அடைந்தனர். சிலர் பாபாவிற்க்கு இந்த தோட்டத்தை வளர்க்க உதவியும் செய்தனர். ஒரு பக்தர் அந்த இடத்தை பாபாவிற்காக விலை கொடுத்து வாங்கி பாபாவிற்கு பரிசாக கொடுத்தார்.

ஷீரடியில் ஒரு மல்யுத்த வீரன் இருந்தான். அவனுக்கும் பாபாவிற்கும் கருத்து வேறுபாடு இருந்து வந்ததால், அவன் பாபாவை ஒரு விரோதியாகவே பாவித்து வந்தான். இந்த சூழ்நிலையில், தன்னுடன் மல்யுத்த போட்டியில் வெற்றி கொள்ள முடியுமா என்று பாபாவிடம் சவால் விடுத்தான். அவனது சவாலை பெரிதாக நினைக்காத பாபா அவனை பொருட்படுத்தாமல் தனது வேலையை பார்க்க தொடங்கினார். நாட்கள் செல்ல செல்ல வாக்குவாதம் முற்றியது. பாபாவும் ஒரு கட்டத்தில் பொறுமையை இழந்து போட்டி

இட முடிவுக்கு வந்தார். பாபாவும் அவனும் போட்டியில் கலந்து கொண்டு ஒருவரை ஒருவர் அடித்து கொண்டனர். அவன் பலத்தால் பாபாவின் பலத்தை அடக்கி போட்டியில் வெற்றியை தனக்கு சாதகம் ஆக்கினான். இந்த நிகழ்வு, பாபாவிற்கு ஆதரவாக இருந்தவர்களுக்கு வருத்தம் அளித்தது.

இந்த சம்பவம் பாபாவை யோசிக்க செய்தது. தீய சக்தி என்று தெரிந்து அந்த துஷ்டனிடம் இனி சரி சமமாக போட்டியிட கூடாது என்ற முடிவுக்கு வந்தார். பாபாவின் தோற்றம் ஒரு இளைஞனை போன்ற தோற்றத்தில் இருப்பதால் அவன் தன்னை வம்புக்கு இழுத்திருப்பான் என்று உணர்ந்து தனது உடை அணியும் முறையை மாற்றிகொண்டார் பாபா.

பாபா துறவிகள் அணியும் ஆடையை போல் தன் உடைகளை மாற்றி கொண்டார். பாபா உடை

அணியும் முறையை மாற்றிய பிறகு அவன் அவரிடம் வரவில்லை. பாபாவை போன்ற ஒரு ஞானியை புரிந்து கொள்ள தவறிய மல்யுத்த வீரன் போட்டியில் சண்டையிட்டு வெற்றி பெற்ற போதும் பாபாவின் அருளை பெற தவறிவிட்டான் என்பது எதார்த்தம். பாபா சேவை என்கிற தனது வாழ்வின் அர்த்தத்தை நோக்கி பயணித்தார்.

பாபாவின் உடை மாற்றத்தை பார்த்த ஷிர்டி மக்கள் பாபாவின் குணம் மற்றும் தெய்வீக ஞானத்திற்கு பொறுத்தமாக உள்ளதை உணர்ந்தனர்.

பணிவு, பக்தி, மருத்துவம், பொறுமை மற்றும் நம்பிக்கை பாபாவை ஷிர்டி மக்களின் தெய்வமாக நினைக்க செய்தது. இறைவனை இவரின் உருவில் பார்க்க தொடங்கினர்.

# 4. தண்ணீரால் விளக்கேற்றிய நிகழ்வு

ஷிர்டி சாய்பாபாவிற்கு விளக்குகளின் வெளிச்சம் என்றால் மிகவும் பிடிக்கும், அவர் துவாரகாமாயி மசூதியில் விளக்கேற்ற ஷீரடியில் இருந்த சில கடைகளில் எண்ணை வாங்கி விளக்கேற்றுவது வழக்கம். எண்ணை வாங்க அவரிடம் பணம் இருக்காது என்று அறிந்த ஷிர்டி கடைகாரர்கள் எண்ணையை பணம் எதுவும் கேட்காமல் இலவசமாக கொடுத்து வந்தனர். சில நாட்கள் பாபா இலவசமாக கிடைத்த எண்ணையை வெய்து விளக்கேற்றி வந்தார். காலப்போக்கில் இலவசமாக எண்ணை தருவதை நிறுத்திவிட எண்ணிய கடைக்காரர்கள் பாபா எண்ணை கேட்ட போது கொடுக்க மறுத்தனர். இந்த நிகழ்வு

பாபாவிற்கு வருத்தமாக இருந்தாலும் இவ்வளவு நாட்கள் இலவசமாக எண்ணை கொடுத்து உதவிய கடைக்காரர்களின் நல்ல எண்ணத்தை மனதில் கொண்டு அவர்களை மேலும் தொந்தரவு செய்ய கூடாது என்று எண்ணினார். அவர்களை எதுவும் சொல்லாமல் மசூதிக்கு திரும்பி வந்துவிட்டார் பாபா. மசூதிக்கு வந்த பாபாவிற்கு மனதில் ஆழ்ந்த சிந்தனை ஓடியது. இத்தனை நாள் உதவியவர்கள் ஏன் திடீரென்று நிறுத்திவிட்டார்கள் என்று யோசித்தார். தீபம் ஏற்ற எதாவது ஒரு வழியை நாமே கண்டறிய வேண்டும் என்று எண்ணினார். ஒரு திரியை எடுத்து விளக்கிலிட்டு அதை எரிய வைக்கும் முயற்சியில் ஈடுபட்டார்.

பாபாவிற்கு எண்ணை கொடுக்க மறுத்த கடைக்காரர்கள் பாபா எப்படி விளக்கேற்ற போகிறார் என்று தெரிந்துகொள்ள ஆவளோடு மசூதி அருகில் நின்று பார்த்தனர். பாபா தனது

விளக்கில் இருந்த ஒரே ஒரு துளி எண்ணையை கீழே கொட்டிவிடாமல் ஒரு தகர குவளையில் எடுத்து பத்திரமாக வாயில் ஊற்றி குடித்தார். இதை பார்த்துகொண்டு இருந்த கடைக்காரர்களுக்கு எதுவும் புரியவில்லை. ஏன் பாபா இவ்வாறு செய்தார் என்று ஒருவரை ஒருவர் பார்த்து கொண்டு மேலும் என்ன நடக்கிறது என்று பார்த்தனர்.

பாபா வாயில் ஊற்றிய எண்ணையை குடித்துவிட்டார். அருகில் இருந்த ஒரு குவளை தண்ணீரை எல்லா விளக்கிலும் ஊற்றினார். விளக்கேற்ற தண்ணீரை ஊற்றி வந்த பாபாவை பார்த்து மலைத்து போய் நின்றபடி இருந்தனர் கடைக்காரர்கள். பாபா விளக்குகளுக்கு தண்ணீர் ஊற்றி முடித்த பிறகு திரியில் நெருப்பை கொளுத்தினார். விளக்குகள் எண்ணை ஊற்றினால் எவ்வாறு பிரகாசமாக எரியுமோ

அதே போல் தண்ணீர் நிரப்பப்பட்ட விளக்குகள் எரிய தொடங்கின. இரவு முழவதும் விளக்கு எரிந்ததை பார்த்த கடைக்காரர்கள் பெரிதும் ஆச்சரியப்பட்டு பாபாவிடம் தங்களது செயலுக்கு மன்னிப்பு கேட்டனர். பாபாவும் மன்னித்தார். இந்த சம்பவத்திற்கு பிறகு இதே போல் மீண்டும் தீபாவளி வந்த போது ஒரு நிகழ்வு அரங்கேறியது.

பாபாவிற்கு ஜாதி மதம் என்ற ஏற்ற தாழ்வுகளில் நம்பிக்கை இல்லை அதனால் அவர் எல்லோரிடமும் சரிசமமாக அன்பாக பழகி வந்தார். பாபாவின் அன்பிற்கு உரிய குழந்தைகளில் சிலர் தாழ்ந்த ஜாதியை சேர்ந்த ஏழை குழந்தைகள் சிலர் இருந்தனர். அந்த குழந்தைகள், தீபாவளி பண்டிகையன்று பாபா உள்ள மசூதியில் விளகேற்ற வேண்டும் என்று பணம் சேர்த்து எடுத்து கொண்டு வணிகர்களிடம் எண்ணை வாங்க சென்றனர். கடைகாரர்கள்

அந்த தாழ்ந்த ஜாதி குழந்தைகள் தங்களிடம் எண்ணை வாங்க வந்திருப்பதை கண்டு கோபம் அடைந்தனர். அவர்களுக்கு எண்ணை தர கூடாது என்று நினைத்து அவர்களை உதாசினபடுத்தினர். இதனால் மனம் உடைந்த குழந்தைகள் அனைவரும் மசூதிக்கு சென்று நடந்த விவரத்தை பாபாவிடம் கூறி வருந்தினர். இதனை கேட்ட பாபா கோபமடைந்தார்.

குழந்தைகளுக்கு சமாதானம் கூறி முன்பு எப்படி விளக்கை தண்ணீரில் ஏற்றினாரோ அதே போல் விளக்கை தண்ணீரால் பற்ற வைத்து குழந்தைகளுடன் தீபாவளி பண்டிகையை சிறப்பாக கொண்டாடினார். குழந்தைகளும் பாபாவின் இந்த அற்புத நிகழ்வை கண்டு பெரும் மகிழ்ச்சியில் இது வரை கொண்டாட முடியாத பண்டிகையை வாழ்நாளில் மறக்க முடியாத அளவில் சிறப்பாக கொண்டினர். இந்த நிகழ்வு

ஷிர்டி மக்களுக்கும் பெரும் சந்தோஷத்தை ஏற்படுத்தியது.  ஜாதி,மதம் என்ற பேதம் எதுவும் இல்லாமல் எல்லோரும் சமம் என்ற எண்ணம் நம் அனைவர்க்கும் வர வேண்டும் என்று பாபா உணர்த்திய இந்த நிகழ்வு ஏற்ற தாழ்வுகளை தகர்க்கும் பாடமாக அமைகிறது.

